Licensed to Post Without Pre-Payment licence No. 6 of N/MD/CPP-55 ANNA Leading Progressive Tamil Daily to the ...

# புரட்சித்தலைவர் தரும் புள்ளி விவரங்கள்

Regd No. TN - MS [C] 244 தந்தி: 420212 4 பக்கம் விலை 70 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 11 சென்னை 13 9 87 ஞாயிறு வெளியூர் 14 9 87 திங்கள் இதழ் 3-3

## வன்னிய சமூகத்திற்கு கழக அரசு செய்த நன்மைகள் என்னென்ன?

## "சமூக ஒற்றுமையை பாழ்படுத்தும் கிளர்ச்சியை புறக்கணிப்பீர்"

சென்னை, செப். 13- வன்னிய சமூதாயத்திற்கு கழக அரசு என்னென்ன நன்மைகள் செய்திருக்கிறது. என்பதைப் புள்ளி விவரங்களுடன் முதல்வர் புரட்சித்தலைவர் எடுத்துக் கூறி உள்ளார். சமூக ஒற்றுமையை பாழ்படுத்தும் கிளர்ச்சியை புறக்கணிக்குமாறும் முதல்வர் புரட்சித்தலைவர் வேண்டுகோள் விடுத்துள்ளார்.

முதல்வர் புரட்சித் தலைவர் விடுத்துள்ள வேண்டுகோளில் கூறி இருப்பதாவது -

என்னை வாழ வைக்கும் தெய்வங்களாகிய தாய்மார்களே! என்னை வழி நடத்திச் செல்லும் பெரியோர்களே! என் இரத்தத்தின் இரத்தமான உடன்பிறப்புக்களே!

தமிழக அரசிற்கும் அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்திற்கும் நீடித்த நல் ஆதரவை வழங்கி வரும் பிற்படுத்தப்பட்ட மக்களிடையே பிளவை ஏற்படுத்தவும் குறிப்பாக வன்னிய சமுதாய மக்கள் தமிழக அரசின் மீதும், அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் மீதும் கொண்டுள்ள பாசத்தை சிதைக்கவும் சில சுயநல சக்திகள் வன்னிய சமூக போர்வையில் கிளர்ச்சி நடத்துவதாக அறிவித்துள்ளன.

தந்தை பெரியார் பேரறிஞர் அண்ணா ஆகியோர் காட்டிய வழியில் அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழக அரசு பொறுப்பேற்றது முதல் வன்னியர்கள் உள்ளிட்ட பின் தங்கிய சமூக மக்களை முன்னேற்ற ஏராளமான சலுகைகளை அளித்து திட்டங்களை தீட்டி பாடுபட்டு வருகிறது.

வன்னிய சமுதாயத்தை சேர்ந்தவர்கள் உயர்நீதி மன்ற நீதிபதியாகவும், மாவட்ட நீதிபதிகளாகவும் மற்றும் பல்வேறு நீதிமன்றங்களிலும் வாய்ப்பு பெற்று வருகின்றனர் கழக ஆட்சியில் தான் வன்னிய சமுதாயத்தினருக்கு உயர் நீதிமன்றத்தில் பிரதிநிதித்துவம் வழங்கப்பட்டது காவல் துறையிலும் உயர் பதவிகளில் வன்னியர்கள் நல்ல முறையில் பணியாற்றி வருகின்றனர்.

வன்னிய சமுதாயத்தை சேர்ந்த 21பேர் கழக சட்டமன்ற உறுப்பினர்களாகவும் 16பேர் காங்கிரஸ் சார்பில் சட்டமன்ற உறுப்பினர்களாகவும் உள்ளனர் மற்ற கட்சிகளில் 2பேர் தான் உள்ளனர்

வன்னிய மக்களிடம் கொண்டுள்ள பாசத்தை வெளிப்படுத்தும் வகையில் புதியதொரு மாவட்டத்திற்கு வன்னிய குல வீரமறவராக விளங்கிய சம்புவரையர் பெயர் சூட்டப்படும் என்று தமிழக அரசு அறிவித்ததை வன்னிய சமூகமே வரவேற்றதை யாரும் மறந்துவிட இயலாது

கழக அரசைப் பொறுத்தவரை கல்வி வேலை வாய்ப்பு இவற்றில் எங்கும் பின்பற்றப்படும் வகுப்பு அடிப்படையிலான ஒதுக்கீடு முறையை கடைபிடித்து வருகிறது இதை மீறி ஜாதி அடிப்படையிலான ஒதுக்கீடு என்ற முறையை நாட்டின் மீது திணிக்க முயற்சி செய்வது தமிழ் சமுதாயத்தின் மத்தியில புதிய குழப்பங்களும் சிக்கல்களும் உருவாக வழி வகுக்கும் என்பதை தமிழ சமுதாயத்தின் ஒட்டு மொத்த வளர்ச்சியில அக்கறையுள்ள அனைவரும் ஆழ்ந்து சிந்திக்கவேண்டிய ஒன்றாகும்

தமிழ் சமுதாயத்தின் ஒட்டு மொத்த பரவலான நலனைக் கருத்தில் கொள்ளாமல் சிலரால் மேற்கொள்ளப்படும் கிளர்ச்சி போன்ற அணுகு முறைகள் நாட்டில் நிலவும் அமைதியைக் குலைக்கவும் சமூகங்களிடையே நிலவும் இணக்கத்தைப் பாழ்படுத்தவும்தான் வழிகோலும் என்பதை அனைவரும் உணர்ந்து செயல்படுவது இன்றைய சூழ்நிலையில் மிகவும் இன்றியமையாத ஒன்று.

அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக்கழகத்தின் தலைமையின் மீதும் கழக அரசின் மீதும் நம்பிக்கையும் பாசமும் கொண்டுள்ள தமிழக மக்கள் குறிப்பாக வன்னிய மக்கள் சுயநல உணர்வுடன் சிலரால் மேற்கொள்ளப்படும் வன்முறைக் கிளர்ச்சிகள் எதுவாயிருப்பினும் அவற்றை தமிழ் சமுதாயத்தின் ஒட்டுமொத்த நலன்கருதி புறக்கணிக்க வேண்டும்

பொது அமைதிக்கும் பொதுமக்களின் உயிர் உடைமை, பாதுகாப்பிற்கும் வன்னிய சமுதாயத்தினருடைய நற்பெயருக்கும் பங்கம் ஏற்படுத்த திட்டமிட்டு செயல்படும் சுய நலமிகள் யாராயிருப்பினும் அவர்களை அடையாளம் கண்டு புறக்கணித்து ஒதுக்கிட வேண்டும்.

வன்னியர் உள்ளிட்ட பிற்படுத்தப்பட்ட மக்கள் வாழ்வில் ஒளியேற்றும் தமிழக அரசுக்கு ஆதரவை உறுதி செய்திடுவீர் என்று முதல்வர் புரட்சி தலைவர் கேட்டுக் கொண்டுள்ளார்.

## தீவிபத்து: வீடுஇழந்த மக்கட்கு அரசு உதவி

மதுரை, செப். 13- ஆண்டிபட்டி தொகுதி கடமலைக்குண்டு ஒன்றியம் மந்திசுனையில் ஏற்பட்ட தீவிபத்தில் பாதிக்கப்பட்டவர்களுக்கு நிதி உதவி மற்றும் அரிசி ஆடைகள் வழங்கப்பட்டன.

மேலும் விபத்தில் இறந்த மூன்று குழந்தைகளுக்கும் முதலமைச்சர் நிவாரண நிதியிலிருந்து நிதிவழங்க ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது என்று மாவட்ட ஆட்சித்தலைவர் தேவராஜ் தெரிவித்தார்,

மந்திசுனையில் தீவிபத்தால் பதிக்கப்பட்ட குடும்பங்கள் ஒவ்வொன்றுக்கும் ரூபாய் 400 வீதம் நிதி உதவியும் வழங்கப்பட்டுள்ளது.

### தலைமைக் கழக அறிவிப்பு

## பேரறிஞர் அண்ணா

அவர்களின்

### 79-வது பிறந்த தினவிழா

### 15-9-1987 (செவ்வாய்க்கிழமை)

பேரறிஞர் அண்ணா அவர்களின் 79-வது பிறந்த தினமாகிய 15-9-1987 செவ்வாய்க்கிழமை அன்று சென்னையில் அண்ணா சாலையில் உள்ள பேரறிஞர் அண்ணா அவர்களின் திருவுருவச் சிலைக்கு கழக முன்னணியினரும் அமைச்சர் பெருமக்களும் சரியாகக் காலை 8-30 மணிக்கு மாலை அணிவித்து மரியாதை செலுத்துவார்கள்.

கழக நிறுவனத் தலைவர் - கழகப் பொதுச்செயலாளர் இதயதெய்வம் மாண்புமிகு, தமிழக முதல்வர்

டாக்டர் புரட்சித்தலைவர்

அவர்களின் ஒப்புதலுடன் இவ்வறிவிப்பு வெளியிடப்படுகிறது.

சென்னை-14
15-9-1987

ஜெயலலிதா எம். பி.
கொள்கைபரப்புச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி.மு. கழகம்

இந்திய ராணுவம் வெளியேறாவிட்டால், சமரச ஒப்பந்தத்தை எதிர்த்து புத்தசாமியார்களுடனும் மற்ற எதிர்கட்சிகளுடனும் சேர்ந்து போராட்டம் நடத்துவோம்!

என்னை தெரிதுங்களா? தமிழ் புத்தக லைப்ரரியை தீயிட்டு கொளுத்திட்டு வந்தீங்களே அப்ப மாலை போட்டு வரவேற்று பரிசா குட்டிமணியையும், ஜெகனை-யும் பிடித்துக்கொடுத்தனே அது நான்தான்! என்னையும் உங்க போராட்டத்திலே சேத்துகுங்க!

சிங்கள வெறியர்கள்

## புரட்சித் தலைவர் அடிக்கல் நாட்டுகிறார்

சிதம்பரம். செப் 13 கம்பம் பள்ளத்தாக்கில் கண்ணகிக் கோட்டம் ரூபாய் ஒரு கோடி செலவில் கட்டப்பட இருக்கிறது.

முதல்வர் புரட்சித் தலைவர் கண்ணகிக்கோட்டத்துக்கான அடிக்கல்லை நாட்டுகிறார்.

கண்ணகி கோட்டத்தில் வைப்பதற்காக கண்ணகி சிலை தயாராக இருக்கிறது.

இந்த தகவலை அமைச்சர் வி. சுவாமிநாதன் நிருபர்களிடம் தெரிவித்தார்.

சிதம்பரத்தில் நிருபர்களுக்கு அளித்த பேட்டியில் அவர் கூறியிருப்பதாவது:

மதுரை மாவட்டம் கம்பம் பள்ளத்தாக்கில் உள்ள பழைய கண்ணகி கோவில் சிறியதாகவும், இடிந்து போன நிலையிலும் உள்ளது.

இவ்வாறு அமைச்சர் விவி சுவாமிநாதன் கூறினார்.

## தமிழகத்தில் ரகசிய வெடிகுண்டு ஆலையா?

திருச்சி, செப் 13 தமிழகத்தில் ரகசிய வெடிகுண்டு தொழிற்சாலை ஏதாவது இருக்கலாம் என்று போலீசாருக்கு சந்தேகம் ஏற்பட்டுள்ளது.

பொன்பரப்பி வங்கியில் நக்சலைட் தலைவன் தமிழரசனும் அவனது கோஷ்டியினரும் கொள்ளை அடித்தனர் அவர்களை பொது மக்களே பிடித்து அடித்து கொன்றது தெரிந்ததே.

அப்போது அவர்கள் தப்பி செல்ல நக்சலைட்டுகள் வெடிகுண்டுகளை வீசினர். அந்த வெடிகுண்டுகளை வெடிகுண்டு நிபுணர்கள் ஆராய்ச்சி செய்தனர்.

### சக்திவாய்ந்தகுண்டு

இது குறித்து வெடி மருந்து துணை இயக்குனர் சற்குணராமன் கூறியதாவது:-

தமிழ் நாட்டிலேயே இப்படிப்பட்ட சக்திவாய்ந்த குண்டு இருந்ததில்லை.

இதற்கு முன் சென்னையில் ஒரு சக்தி வாய்ந்த வெடிகுண்டு சிக்கியது அது ஜெர்மனியில் செய்யப்பட்டதாகும் இப்போது பொன்பரப்பியில் வீசப்பட்ட வெடிகுண்டு ஜெர்மனி வெடிகுண்டை விட சக்தி வாய்ந்தது.

வெளிநாட்டு பெயர்களும் இந்த வெடிகுண்டில் இல்லை. எனவே இந்த குண்டுகள் வெளிநாட்டில் தயாரிக்கப்படவில்லை என்று தெரிகிறது மிகவும் திறமைவாய்ந்த விஞ்ஞானிகள் தான் இந்த குண்டுகளை தயாரித்து இருக்க வேண்டும்.

இந்த குண்டு மிகவும் கச்சிதமான அளவிலும் அளவான எடையுடனும் இருந்தது ஒரு நவீன தொழிற்சாலை மூலமே இந்த சக்தி வாய்ந்த வெடிகுண்டுகளை தயார் செய்ய முடியும்.

இந்த வெடிகுண்டுகள் 100 கிலோ எடை உள்ள ஒரு மணல் மூட்டை மீது வெடித்தபோது அந்த மணல் மூட்டை 200 அடிக்கு மேலே சென்று சிதறியது என்றால் அந்த குண்டின் பயங்கரத்தை அறிந்து கொள்ள முடியும். இவ்வாறு அவர் கூறினார்.

பொன்பரப்பியில் வீசப்பட்ட வெடிகுண்டுகள் வெளிநாட்டு தயாரிப்பு இல்லை என்றால் அது எங்கிருந்து வந்தது என்ற சந்தேகம் போலீசுக்கு எழுந்துள்ளது இந்த வெடிகுண்டுகளை தமிழரசன் எங்கிருந்து வாங்கினான் என்பது குறித்து போலீசார் தீவிர விசாரணை நடத்து வருகின்றனர்.

வெளிநாட்டின் தயாரிப்பு இல்லை என்றால் தமிழகத்தில ரகசியமாக வெடிகுண்டு தொழிற்சாலை ஏதாவது உள்ளதா என்பது குறித்துப் போலீசார் விசாரணை நடத்தி வருகின்றனர்.

இதற்கிடையில் பொன்பரப்பியில் மிரட்டல் கடிதங்கள் வந்த வண்ணம் உள்ளதாக கூறப்படுகிறது,

### போலீஸ் அதிகாரி பேட்டி

இது குறித்து மாவட்ட துணை போலீஸ் சூப்பிரண்ட் மாரப்பன் கூறியதாவது:-

பொன் பரப்பி மக்கள் பீதி அடைய தேவையில்லை? பாதுகாப்பு நடவடிக்கைகள் தீவிரமாக உள்ளது.

மக்களுக்கு உதவ நாங்கள் எப்போதும் தயாராக உள்ளோம் பொது மக்கள் தங்கள் கருத்துக்களையோ தகவல்களையோ எப்போதும் என்னிடம் வந்து சொல்லலாம்.

ஒவ்வொரு கிராமத்திலும் பொன் பரப்பி போன்ற மக்கள் இருந்தால் வன்முறை சம்பவம் ஒழிந்து விடும் மிரட்டல் கடிதங்கள் பற்றி மக்கள் பீதி அடைய வேண்டாம் விசாரணை ரகசியமாக நடந்து வருகிறது, பொது மக்கள் வீண் பீதியும் பயமும் அடையாமல் இருக்கலாம்

இவ்வாறு மாரப்பன் கூறினார்.

## அரிசி மூட்டைக்குள் மனிதரின் துண்டித்தகால்

கொச்சி, செப். 13- ரேஷன் கடை மூலம் வழங்குவதற்கு வந்த அரிசி மூட்டைக்குள் மனிதரின் துண்டித்த கால் கிடந்தது

இந்திய உணவு கழகத்திடமிருந்து அரிசியைப் பெற்று கொச்சியில் ரேஷன் கடை மூலம் வினியோகிக்கப்பட்டது. போலீசார் வந்தனர்.

ஒரு மூட்டையைப் பிரிக்கும் போது அதனுள் இருந்து முடை நாற்றம் வீசியது. அரிசி மூட்டைக்குள் மனிதரின் துண்டித்த கால் கிடந்தது உடனடியாக போலீசுக்கு புகார் கொடுக்கப்பட்டது.

டாக்டர்களுடன் வந்தனர் துண்டித்தகால் பரிசோதனை செய்யப்பட்டது எக்ஸ்ரே படமும் எடுக்கப்பட்டது வாலிபரின் கால் அது என்று கருதப்படுகிறது

ஆந்திராவில் இருந்து கொண்டு வரப்பட்ட அரிசி மூட்டை...

# விவசாயிகளுக்கு புரட்சிதலைவர் சலுகை

## ரூ5கோடி அபராத வட்டி தள்ளுபடி

மதுராந்தகம். செப். 13 கூட்டுறவு கடன்வாங்கிய விவசாயிகளுக்கு அபராத வட்டியை தள்ளுபடி செய்யும்படி முதல்வர் புரட்சித் தலைவர் உத்தரவிட்டுள்ளார் இதனால் செங்கற்பட்டு மாவட்டத்தில் ரூபாய் 5 கோடி அபராத வட்டி தள்ளுபடி செய்யப்பட்டது.

காஞ்சிபுரம் மத்திய கூட்டுறவு வங்கியின் தனி அதிகாரி பி.சண்முகம் இந்த தகவலை தெரிவித்தார்.

அவர் கூறியதாவது செங்கற்பட்டு மாவட்டத்தில் 337 கிராமிய முதன்மை விவசாய கடன் சங்கங்கள் உள்ளன இனி இவை முதன்மைகூட்டுறவு வங்கி என அழைக்கப்படும்.

இவற்றின் மூலம்31-3-86 வரை 72.938 விவசாயிகளிடமிருந்து ரூபாய் 12 கோடியே 12 லட்சம் கடன்பாக்கி வர வேண்டி இருக்கிறது.

முதல்வர் புரட்சித் தலைவர் கடனை திருப்பி கட்டிய விவசாயிகளுக்கு அபராத வட்டியை தள்ளுபடி செய்யும்படி உத்தரவிட்டார்.

இவர்களுக்கு அபராத வட்டி ரூபாய் 5 கோடியே 6 லட்சத்து 32 ஆயிரம் தள்ளுபடி செய்யப்பட்டது நகைக்கடன் வழங்க மேலும் 35 சேவை சங்கங்கள் தேர்ந்தெடுக்கப்படும்.

இவ்வாறு அதிகாரி பி. சண்முகம் தெரிவித்தார்.

## 50 ஆயிரம் குழந்தைகளுக்கு இலவச போலியோ மருந்து: சென்னை மாநகராட்சி ஏற்பாடு

சென்னை. செப். 13- முதல்வர் புரட்சித் தலைவர் உத்தரவுக்கு இணங்க அண்ணா பிறந்தநாளை முன்னிட்டுக் கொண்டாடப்பட உள்ள குழந்தைகள் நல வாரத்தில் சென்னை மாநகராட்சி 50 ஆயிரம் குழந்தைகளுக்கு இலவசமாக போலியோ மருந்து தர உள்ளது.

பேரறிஞர் அண்ணா பிறந்தநாளான செப்டம்பர் 15ந்தேதி முதல் ஒரு வார காலத்தை குழந்தைகள் நலவாரமாக கொண்டாடும்படி முதல்வர்புரட்சித்தலைவர் கேட்டுக் கொண்டுள்ளார்

இதையொட்டி சென்னை மாநகராட்சி சார்பில் குழந்தைகள் நல விழா கொண்டாடப்படுகிறது.

15 ந் தேதி காலை 10 மணிக்கு குழந்தைகள் நல விழாவை அமைச்சர் ராசாராம், துவக்கி வைக்கிறார்

இந்தஒருவாரகாலத்தில் மாநகராட்சி குடும்ப நல மையங்கள் மாநகராட்சி மருத்துவமனைகள் முதலமைச்சர் சத்துணவுகூடங்கள் ஆகிய இடங்களில் ஒரு வயதிற்கு உட்பட்ட குழந்தைகளுக்கு போலியோமருந்து இலவசமாக அளிக்கப்படும் இதன் மூலம் சுமார் 50ஆயிரம் குழந்தைகள் பயன் பெறுவார்கள்.

இந்த வாரத்தில் சென்னை நகரில் ஆங்காங்கே கொழு கொழு குழந்தைகள போட்டி நடைபெறும்

இத்தகவலை மாநகராட்சி கமிஷனர் சாந்த ஷீலா நாயர் தெரிவித்துள்ளார்.

## இந்திய அரசாங்கம்
### தகவல் தொடர்புத் துறை

செயற் பொறியாளர் தகவல் தொடர்பு ஸிவில் டிவிஷன் எர்ணாகுளம் அவர்களால் மத்திய பொதுப்பணித்துறை மிலிடரி இன்ஜினியரிங்சர்வீஸ்ரெயில்வே மாநில பொதுப்பணித்துறை மற்றும் இந்த இலாகாவைச் சேர்ந்த அங்கீகரிக்கப்பட்ட தகுதி வாய்ந்த காண்ட்ராக்டர்களிடமிருந்து கீழ் காணும் வேலைகளுக்கான முத்திரையிட்ட இனவாரி டெண்டர்கள் 7-10-87 பிற்பகல் 3மணி வரை வரவேற்கப்படுகின்றது.

I. கட்டிட வேலை: கேரளாவிலுள்ள திருவில்லாவில் தொலைபேசி அலுவலக கட்டிடம் கட்டுதல் உட்புற குடிநீர் சப்ளை மற்றும் சுகாதார இணைப்புகள் செய்தல்

II. உட்புற குடிநீர் சப்ளை மற்றும் சுகாதார இணைப்புகள் அளித்தல் இதைப்போன்ற வகையிலான கட்டிட வேலைகளை வெற்றிகரமாக முடித்துக் கொடுத்த காண்ட்ராக்டர்களுக்கு மட்டும்டெண்டர் படிவங்கள் வழங்கப்படும் டெண்டர்தாரர்கள் குறைந்த பட்சம் ஒவ்வொன்றும் 15 லட்சத்திற்கு மூன்று வேலைகள் அல்லது குறைந்த பட்சம் 20 லட்சத்திற்கு இரண்டு வேலைகளையோ வெற்றிகரமாக முடித்து கொடுத்தவராக இருக்க வேண்டும்.

இதற்கு ஈடாக டெண்டர்தாரர் தாங்கள் வேலை செய்து முடித்த சம்பந்தப்பட்ட இலாகாவிலிருந்து வெற்றிகரமாக பணியை முடித்ததற்கான நற்சான்றிதழ் மற்றும் சம்பந்தப்பட்ட பத்திரங்கள் ஆகியவற்றை சமர்ப்பிக்கவேண்டும்,

டெண்டர்தாரர் கட்டிட வேலைகளுக்கான மெஷினரிகளான ஹாயிஸ்ட் மிக்சர் மெஷின், வைப்ரேட்டர்.முதலிவற்றை சொந்தமாக வைத்திருக்க வேண்டும் மேலும்இந்த விவரங்களை அதற்கு சாதகமாக விளங்கும் வகையில் அளிக்கப்பட வேண்டும்.

வேலையின் பெயர்: கேரளாவிலுள்ள திருவில்லாவில் டெலிபோன் எக்ஸ்சேஞ் கட்டிடம் கட்டுதல். உட்புற குடிநீர் சப்ளை மற்றும் சுகாதார வசதிகள் செய்து முடித்தல்.

உத்தேச செலவுதொகை: ரூ 44.33.129

I (கட்டிடப் பகுதி)

II உட்புற குடிநீர் சப்ளை மற்றும் சுகாதார வசதிகள் ரூ. 53,980-00 மொத்தம் ரூ. 44,87.109-

டேவணித் தொகை டெபாஸிட் ரூ.20,000-

காலவரம்பு: 15 மாதங்கள்

டெண்டர்கள் அதே தினம் பிற்பகல் 3.30 மணிக்கு திறக்கப்படும்.

டேவணித்தொகை டெபாஸிட்டை ரிசர்வ் வங்கியினால் அங்கீகரிக்கப்பட்ட ஏதாவது ஒரு ஷெட்யூல்ட் வங்கியில் டிமான் டிராப்ட் அக்கவுண்ட்ஸ் ஆபீசர் டெலிகாம் ஸிவில் டிவிஷன் எர்ணாகுளம் அவர்கள் சார்பில் எடுத்து டெண்டருடன் தனி சீலிட்ட கவரில் அனுப்பவேண்டும் டெண்டர் பாரங்கள் இந்த அலுவலகத்திலிருந்து :-10 87 பிற்பகல் 3மணி முதல் எல்லா அலுவலகநாட்களிலும் ரூபாய் 15- + வி.வரி (ரூபாய் நூற்றுஐம்பது மட்டும் +வி.வரி) சேர்த்து செலுத்தி பெற்றுக்கொள்ளலாம்.

மேற்கண்ட வகையில் டெண்டர் டெபாஸிட் டெண்டருடன் இணைத்து அனுப்பப்படாமல் உள்ள டெண்டர்கள் முழுவதுமாக நிராகரிக்கப்படும்

Cavp 7.11(57 4)87

## வீடியோ கேசட்டில் தங்கம் கடத்திய பெண் கைது

பம்பாய் செப் 13- சென்னையிலிருந்து பம்பாய் சென்ற ரயிலில் கடப்பாரயில்நிலையத்தில் மூன்று நபர்களிடமிருந்து ரூபாய் 17 லட்சம் மதிப்புள்ள 15 தங்க பிஸ்கட்டுகள் கைப்பற்றப்பட்டன.

பம்பாய் விமான நிலையத்தில் ஹாங்காங்கிலிருந்து வந்த பெண் ஒருவரிடமிருந்து வீடியோ கேசட்டில பதுக்கி வைத்திருந்த 14 தங்கப்பாளங்களைசுங்கஇலாகா அதிகாரிகள்கைப்பற்றினர். இவற்றின் மதிப்புரூபாய்5.25லட்சம் ஆகும் இன்னொரு பயணியின்சூட்கேசிலிருந்து 1400 கிராம எடையுள்ள 12 தங்கப் பாளங்களையும அதிகாரிகள் கைப்பற்றினர்

## தஞ்சையில் விவசாயிகள் குறைகேட்கும் நாள்

தஞ்சாவூர். செப் 13- விவசாயிகள் குறைகேட்கும் நாள் கூட்டம் வரும் 18ந் தேதி வெள்ளிக்கிழமை பிற்பகல் 4மணியளவில் மாவட்ட ஆட்சியர் அலுவலகத்தில் நடைபெறுகிறது. பல்வேறு துறை அலுவலர்கள் பங்கேற்கும் இக்கூட்டத்தில் விவசாயிகள் அதிக அளவில் கலந்து கொண்டு பாசனம் வேளாண்மை குறித்து மனுக்கள் தருமாறு தஞ்சாவூர் மாவட்ட ஆட்சித் தலைவர் மா. இராமு கேட்டுக் கொண்டுள்ளார்.

## தெளிப்பு முறை பாசனம்: ரூ.30 கோடி அனுமதி

சென்னை, செப் 13- வறட்சியை சமாளிக்க தெளிப்பு முறை பாசன முறையை பிரபலப்படுத்த அரசு ரூ. 30 கோடி அனுமதித்துள்ளது என்று அமைச்சர் ராசாராம் கூறினார்.

விவசாயம் கிராம வளர்ச்சி பற்றிய கருத்தரங்கில் அமைச்சர் ராசாராம் பேசுகையில் இத்திட்டத்தின் கீழ் கோவை அண்ணா மாவட்டங்களில் உள்ள சிறு விவசாயிகட்கு ஒரு கோடி ரூபாய் வழங்கப்பட்டுள்ளது என்று கூறினார்.

## நமது இல்லத் திருமணம்

சென்னை மாவட்ட கழக பிரதிநிதி கட்பீஸ் வரதனின் புதல்வர் வி. சுந்தரராஜிக்கும்சென்னை பழனிசாமியின் புதல்வி தங்கமாரிக்கும் கடந்த 9ந் தேதிபஞ்சநாதன் திருமண மண்டபத்தில் முன்னாள்அமைச்சர்ஆர் எம்வீ தலைமையில் திருமணம் நடைபெற்றது

அவ்வமயம் கலவை சச்சிதானந்தசுவாமி மற்றும் காஞ்சி பாலாஜி இராயபுரம்பகுதி செயலாளர் இரா சோமசுந்தரம் மற்றும்கழகத்தோழர்கள் பெருவாரியாக கலந்துகொண்டு சிறப்பித்தார்கள்

★ ★ ★

சென்னை 89 வது வட்டம் பொன்னியின் செல்வன் பாரத் எம். ஜி. ஆர் மன்ற செயலாளர் கே. எஸ் மணியின் சகோதரி வனிதாவுக்கும் ராஜீவுக்கும் 11-ந் தேதி திருமணம் நடைபெற்றது வரவேற்பு விழாவில் என். வி. என். செல்வம் பி.கே. ரவி,பாலகிருஷ்ணன் வேதமுத்து. அழகேசன் மற்றும் பலர் கலந்து கொண்டு மணமக்களை வாழ்த்தினர்.

## இந்தியாவுக்கு காமன் வெல்த் கடனுதவி

புதுடெல்லி. செப். 13- தொழில் கடன் மற்றும் முதலீட்டு இந்திய கழகம் காமன்வெல்த் வளர்ச்சி கழகத்திடமிருந்து 10 மில்லியன் பவுண்டு ஸ்டெர்லிங் கடன் பெறுகிறது. இதற்கான ஒப்பந்தத்தில் இரு கழகங்களும் கையெழுத்திட்டுள்ளன.

தொழில் வர்த்தகம் ஆகிய துறைகளிலும் மின்சாரம் தொலை தொடர்பு குடிநீர் தொடர்பான வளர்ச்சிப் பணிகளிலும் இக்கடன் தொகை செலவிடப்படும்.

## இந்த ஆண்டில் ரூபாய் 51 கோடியில் சாலைகள் அமைப்பு

மண்டபம், செப். 13- தமிழகத்தில் இந்த ஆண்டில் 51 கோடி ரூபாயில் சாலைகள் அமைக்கப்பட்டுள்ளதாக அமைச்சர் ராமசாமி கூறினார்.

மண்டபம் ஊராட்சி ஒன்றியம் சாத்தான்குளம் கிராமத்தில் ரூபாய் 4 லட்சத்து 80 ஆயிரம் செலவில் கட்டப்பட்டுள்ள 65 அன்னை இந்திரா நினைவு ஆதிதிராவிடர் குடியிருப்புகளை அமைச்சர் ராமசாமி திறந்து வைத்தார் மாவட்ட ஆட்சித்தலைவர் அஜய் பட்டாச்சார்யா மண்டபம் ஊராட்சி ஒன்றியத் தலைவர் அன்வர்ராஜா மண்டபம் பேரூராட்சித் தலைவர் தங்கமரக்காயர் மாவட்ட வளர்ச்சி முகமை திட்ட அலுவலர் மாயாண்டி கோட்ட வளர்ச்சி அலுவலர் கோவிந்தராஜன் ஆகியோர் சிறப்புரையாற்றினார்கள்

மாவட்ட ஆட்சித் தலைவர் பேசுகையில் இந்த 63 ஆதிதிராவிடர் குடியிருப்புகளும் சுத்தமாக பராமரிக்கப்பட வேண்டும் மாதிரி குடியிருப்புகளாக இருக்க வேண்டும் மரங்கள் வளர்க்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டார்,

அணிகவரித்துறை அமைச்சர் பேசுகையில் இராமநாதபுரம் மாவட்டத்தில் சென்ற ஆண்டு 205 ஆதிதிராவிடர் வீடுகள் 2 கோடி செலவில் கட்டப்பட்டுள்ளது, இந்த ஆண்டு 1200 வீடுகள் ரூபாய் ஒரு கோடியே 25 லட்சரூபாய் செலவில் கட்டப்படும் தமிழகம் முழுவதும் இந்த ஆண்டு ரூபாய் 51 கோடி செலவில் சாலைகள் அமைக்கப்பட்டுள்ளன கிராமங்கள் குடிசைகளுக்கு ரூபாய் ஏழு லட்சத்து 50 ஆயிரம் செலவில் இலவச மின்சாரம் வழங்கப்படும் என்றும் ரூபாய் 20கோடி செலவில் இலவசக்காலணிகள் குழந்தைகளுக்கு வழங்கப்படும் என்றும் கூறினார்



## சீக்கிய தீவிரவாதிகள்மீது தேசதுரோக வழக்கு

அமிர்தசரஸ், செப் 13- சீக்கியதீவிரவாதிகளுக்கு நேரடியாக ஆதரவு அளிப்பதாக அறிவித்த சீக்கிய மத குருமார்கள் மீதுராஜதுரோக வழக்கு தொடரப்படும் என்று உயர் போலீஸ் அதிகாரி ஒருவர் தெரிவித்தார்.

பஞ்சாப் மாநிலத்தை இந்தியாவிலிருந்துபிரித்து காலிஸ்தான்என்றபெயரில் தனி நாடாக்க சீக்கிய தீவிரவாதிகள் முயன்று வருகின்றனர் இவர்களுக்கு வெளிநாடுகளில் இருந்தும் பணம் மற்றும் ஆயுத உதவிகள் கிடைக்கின்றன

### கொலை கொள்ளை

இதன்மூலம் தீவிரவாதிகள் பஞ்சாபில் கொலை- கொள்ளை போன்ற நாச வேலைகளில் ஈடுபடுகின்றனர்

இவர்களை முறியடிக்க மத்திய அரசு தீவிரமுயற்சிகளைமேற்கொண்டுள்ளது தீவிரவாதிகளை மறைமுகமாகவோ: வெளிப்படையாகவே ஆதரிப்பவர்கள் அவர்களது கொள்கைகளைஆதரித்துபேசுவோர் ஆகியோரை தீவிரவாத மற்றும் நாச வேலை தடுப்புச் சட்டத்தின் கீழ் கைது செய்யலாம என்ற சட்டம்உள்ளது

### ராஜதுரோக வழக்கு

தீவிரவாதிகளுக்கு சீக்கியர்கள் ஆதரவு அளிக்க வேண்டும் என்றும் அவர்களது முயற்சிகளில் உதவி செய்யவேண்டும் என்றும் 4சீக்கிய மத குருமார்கள் சமீபத்தில் அழைப்பு விடுத்திருந்தனர்.

காலிஸ்தான் அடையும் வரை சீக்கிய இளைஞர்கள் ஓயமாட்டார்கள் அவர்களை எந்தசக்தியாலும் ஒடுக்கமுடியாது என்றும் கூறினர்.

இதையொட்டி அந்த 4 சீக்கிய மத குருமார்கள் மீது ராஜ துரோக வழக்கு தொடரப்படும் என்று அமிர்தசரஸ் உயர போலீஸ் அதிகாரி ராஜீந்தர் சிங் கூறினார்.

இது குறித்து ராஜீந்தர் சிங் கூறியதாவது:-

மத குருமார்கள் சட்டத்திற்கு அப்பாற்பட்டவர்கள் அல்ல அவர்கள் விரைவில் ராஜதுரோக குற்றத்தின் கீழ் கைது செய்யப்படுவார்கள் அவர்களை கைது செய்வதை யாராலும் தடுக்க முடியாது.

இவ்வாறு அவர் கூறினார்:-

இதற்கிடையில் அகில இந்திய சீக்கிய மாணவர் சங்கத்தின் முன்னாள் தலைவர் அரிந்தர்சிங் மீது ராஜதுரோக குற்றம் புரிந்ததாக போலீசார் வழக்கு பதிவு செய்துள்ளனர்

## நாதஸ்வரவித்வான் ராஜரத்தினம் பிள்ளை மறைவு

கும்பகோணம் செப் 13 பிரபல நாதஸ்வரவித்வான கே.என் ராஜரத்தினம்பிள்ளை தஞ்சை மாவட்டம் கோட்டூரில் அவரது இல்லத்தில் மாரடைப்பால் மரணம் அடைந்தார் அவருக்கு வயது57 அவர் தமிழக அரசிடம் கலைமாமணி விருது பெற்றவர்

## ஊரக வேலைவாய்ப்பு: ரூபாய் 60 கோடி பணிகள் அமைச்சர் ராமசாமி தகவல்

ராமநாதபுரம் செப் 13. தமிழகத்தில் இந்த ஆண்டு 60 கோடி ரூபாய் அளவுக்கு ஊரக வேலை வாய்ப்பு திட்டத்தின் கீழ் பணிகள் நடைபெற்று வருவதாக அமைச்சர் ராமசாமி கூறினார்

மண்டபம் ஊராட்சி ஒன்றியத்தைச் சேர்ந்த வைகாரன ஊரணி கிராமத்தில் ரூபாய்69 ஆயிரம் செலவிலும் வட்டான் வலசை கிராமத்தில்ரூபாய் 72 ஆயிரம் செலவிலும் கட்டப்பட்டுள்ள முதலமைச்சர் சத்துணவு கூடங்களையும் உச்சிப்புளியில் ரூபாய் ஒரு லட்சம் செலவிலும் வழுதூர் கிராமத்தில் ரூபாய் 60 ஆயிரம் செலவிலும் கட்டப்பட்டுள்ள ஒட்டுண்ணி வளர்ப்பு கட்டிடத்தையும் அமைச்சர் ராமசாமி திறந்து வைத்தார்

மண்டபம் ஊராட்சி மன்றத்தலைவர் அன்வர் ராஜா இவ்விழாக்களுக்கு ஏற்பாடு செய்து விழாத் தலைமையேற்று நடத்தினார் மண்டபம் ஊராட்சி ஒன்றிய ஆணையர் இராமநாதன் நன்றியுரை நிகழ்த்தினார்

அமைச்சர் ராமசாமி பேசுகையில் இந்த ஆண்டு தமிழகம் முழுவதும்தேசிய ஊரக வேலை வாய்ப்புத் திட்டம் மற்றும் ஊரக வேலை வாய்ப்பு உறுதியளிப்புத்திட்டத்தின் கீழ் 60 கோடி ரூபாய் செலவில பணிகள் நடைபெறும் என்று கூறினார்.

## கே பி செல்வராசை அமைச்சர் ப.உ.ச.பார்த்தார்

சென்னை. செப் 13 அரசு பொது மருத்துவமனையில் சிகிச்சைபெற்று வரும் சேலம் கே பி செல்வராசை அமைச்சர் ப.உ.ச பார்த்து உடல் நலம் விசாரித்தார்,

கே பி செல்வராசு பூரண உடல் நலம் பெற்றுவிட்டார் இன்னும் ஒரிரு நாட்களில் மருத்துவமனையிலிருந்து இல்லம் செல்லலாம் என்று மருத்துவமனை உயர் மருத்துவா அமைச்சர் ப.உ.ச.விடம் தெரிவித்தார்.



Edited and published by K. RAVINDRAN on behalf of Thangamani Publication and Printed by all India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson manickam Road, MADRAS - 600 029.

## பெட்டிக் கடை வைக்க கடனுதவி

திருச்சி செப். 13- தமிழ்நாடு ஆதிதிராவிடர் வீட்டு வசதி மற்றும் வளர்ச்சி நிறுவனம் (தாட்கோ) மூலமாக நகரங்களிலும் கிராமப்புறங்களிலும் வசிக்கும் ஆதிதிராவிடர் குடும்பங்களுக்கு சுயவேலை வாய்ப்பு திட்டத்தின் மூலம் வியாபாரம் செய்ய வசதியாக இரும்பு தகட்டால் தயாரிக்கப்பட்ட கடைகள் வழங்குவதற்கான ஆணை ஒன்றை அரசு பிறப்பித்திருக்கிறது.

இதன்படி தமிழ்நாட்டில் 123 ஆதிதிராவிடர் குடும்பங்களுக்கு ரூபாய் 14 76 லட்சம் செலவில் இந்தத் திட்டம் அமலாக்கப்பட இருக்கிறது மேற்படி தொகையில் 6 15 லட்சம் ரூபாய் மான்யமாகும்.

இந்தத் திட்டத்தின் கீழ் திருச்சி மாவட்டத்தில் 10 ஆதிதிராவிடர் குடும்பங்களுக்கு சுயவேலை வாய்ப்பு திட்டத்தின் கீழ் வியாபாரம் செய்ய வசதியாக இரும்புப் பெட்டி கடைகள ரூபாய் 1 20 லட்சம் செலவில் தயாரிக்கப்படுகிறது.

ஒரு இரும்பு பெட்டி கடை வைத்து வியாபாரம் செய்ய ரூபாய் 12 ஆயிரம் வரை செலவாகிறது இதில 5 ஆயிரம் ரூபாய் மான்யமாக வழங்கப்படும் என்று மாவட்ட ஆட்சித்தலைவர் உஜாகர்சிங் கூறினார்.

## இலங்கையில் வறட்சி சீனாவிடமிருந்து அரிசி வாங்க முடிவு

கொழும்பு செப் 13 அவசர தேவைக்காக சீனா பாகிஸ்தான ஆகிய நாடுகளிடமிருந்து 40 ஆயிரம் மெட்ரிக்டன் அரிசியை வாங்க இலங்கை அரசு முடிவு செய்துள்ளது

இலங்கையில் வறட்சி காரணமாக சீனா பாகிஸ்தான் ஆகிய நாடுகளிடமிருந்து அரிசி வாங்க உள்ளோம்

## போப் ஆண்டவர் தாக்கு

நியூ ஆர்லியன் செப் 13 ஒழுக்ககெட்ட நாடு அமெரிக்கா என்று போப் ஆண்டவர் வேதனையுடன் குறிப்பிட்டார்.

2 வது போப் ஜான்பால் அமெரிக்காவில் சுற்றுப் பயணம் செய்கிறார் கொலம்பியாவில் அவருக்கு வரவேற்பு கொடுக்கப்பட்டது அவர் பேசுகையில் கூறியதாவது

அமெரிக்காவைப் பொறுத்தவரை ஒவ்வொரு தனி நபருக்கும் குடும்பத்திற்கும் இருக்கவேண்டிய அடிப்படை ஒழுக்கம் நாணயம் எல்லாம் கெட்டுவிட்டது. இதனால் சமுதாயமே சீர்குலையும் நிலையில் உள்ளதை வேதனையுடன் குறிப்பிடுகிறேன் குடும்ப ஒழுக்கம் சிதைந்து சமூக ஒழுக்கம் குறைந்து தேச ஒழுக்கமே சீர்கேடு அடையத் தக்க நிலையை எட்டிவிட்டது.

பாசத்திற்கு எதிரான பாவ காரியங்கள் ஒழுக்கமின்மை அதைத் தொடர்ந்து கருச்சிதைவுகள் எல்லாம் முன்னேற்றத்தின் அறிகுறிகள் என்று கருதப்பட முடியாதவை என கூறினார்.

---

# வன்னியகுல மக்களுக்கு

## மாண்புமிகு முதல்வர் எம். ஜி. ஆர். அவர்களின்

# வேண்டுகோள்

**என்னை வாழவைக்கும் தெய்வங்களாகிய தாய்மார்களே!**

**என்னை வழிநடத்திச் செல்லும் பெரியோர்களே!**

**என் இரத்தத்தின் இரத்தமான உடன்பிறப்புக்களே!**

தமிழக அரசிற்கும், அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்திற்கும் நீடித்த நல்லாதரவை வழங்கி வரும் பிற்படுத்தப்பட்ட மக்களிடையே பிளவை ஏற்படுத்தவும், குறிப்பாக வன்னிய சமுதாய மக்கள் தமிழக அரசின் மீதும், அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் மீதும் கொண்டுள்ள பாசத்தை சிதைக்கவும், சில சுயநல சக்திகள் வன்னிய சமூகப் போர்வையில் கிளர்ச்சி நடத்துவதாக அறிவித்துள்ளன

தந்தை பெரியார், பேரறிஞர் அண்ணா ஆகியோர் காட்டிய வழியில் அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழக அரசு பொறுப்பேற்றது முதல் இன்றைய கழக அரசு வன்னியர்கள் உள்ளிட்ட பின் தங்கிய சமூக மக்களை முன்னேற்ற ஏராளமான சலுகைகளை அளித்து திட்டங்களைத் தீட்டி பாடுபட்டு வருகிறது. கல்வித்துறையிலும் வேலை வாய்ப்பிலும் வன்னியர்கள் உள்ளிட்ட பின்தங்கிய மக்களுக்கு இதுவரை எந்த அரசும் செய்திராத வகையில் நலன் தரும் பணிகளை ஆற்றிவந்துள்ளது. பிற்படுத்தப்பட்டோர் மேம்பாட்டுக்காக 1976-77ல் ஏறத்தாழ ரூபாய் 6 கோடியாக இருந்த அரசு நிதி ஒதுக்கீடு 1986-87ல் ரூபாய் 13 50 கோடியாக கணிசமாக உயர்த்தப்பட்டுள்ளது

வேலைவாய்ப்பில் வன்னியர் உள்ளிட்ட பிற்படுத்தப்பட்டோருக்கான ஒதுக்கீடு 31 சதவீதமாக இருந்ததை அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழக அரசு 1980ல் 50 சதவீதமாக உயர்த்தி இருக்கிறது இந்த இட ஒதுக்கீடு அரசு துறைகளில மட்டுமன்றி அரசின இதர நிறுவனங்களிலும் பின்பற்றப்பட்டு வருகிறது, இதனால் பிற்படுத்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த வன்னிய சமூக மக்களும் அதிக அளவில் வேலைவாய்ப்பு பெற்று வருவதை யாரால் மறுக்க முடியும?

அதேபோல், வன்னியர்கள் உள்ளிட்ட பிற்படுத்தப்பட்ட மாணவர்கள் கல்வி பயில உதவித்தொகை வழங்கப்படுகிறது இலவச சத்துணவு, சீருடை, இலவச பாடப் புத்தகங்கள் போன்ற திட்டங்களால் லட்சக்கணக்கான ஏழை வன்னிய சமூக சிறுவர் சிறுமியர் கல்விபெற ஊக்கம் அளிக்கப்படுகிறது மற்றும் மாணவர்களுக்கு விடுதி வசதிகள் ஆண்டுக்கு ஆண்டு அதிகரிக்கப்பட்டு வருகிறது மேலும், மருத்துவம், பொறியியல், விவசாயம் மற்றும் கால்நடை மருத்துவம் போன்ற கல்லூரிகளில் சேர்வதற்கான நுழைவுத் தேர்வில் பங்குபெற தேவையான இலவச பயிற்சி வன்னியர் உள்ளிட்ட பிற்பட்ட மாணவர்களுக்கு அளிக்கப்படுகிறது. இதே போல, அரசு தேர்வாணைக்குழு தேர்வுகளுக்கும், வங்கி வேலை வாய்ப்புத் தேர்வுகளுக்கும் தனிப்பயிற்சி அளிக்கப்படுகிறது.

அரசின் பதவிகளில் பிற்படுத்தப்பட்ட மக்கள் அமரும் வாய்ப்பு ஆண்டுக்கு ஆண்டு உயர்ந்தே வருகிறது. அவ்வாறான நிலையில் பிற்படுத்தப்பட்ட சமூகத்தில் ஒரு பிரிவினரான வன்னிய சமூக மக்களுக்கும் வாய்ப்புகள் அதிகரித்தே வருகின்றன.

இவை தவிர அரசின் பல்வேறு துறைகளில் வன்னிய சமூகத்தைச் சேர்ந்தவர்கள் உரிய வாய்ப்பு பெற்று முன்னேறி வருகின்றனர்.

உயர்நீதிமன்ற நீதிபதியாகவும், மாவட்ட நீதிபதிகளாகவும் மற்றும் பல்வேறு நீதிமன்றங்களிலும் வன்னியர்கள் வாய்ப்பு பெற்று வருகின்றனர். சென்னை உயர்நீதி மன்றத்தில் சுதந்திரமடைந்த காலத்திலிருந்து வன்னிய சமுதாயத்தினருக்கென உயர்நீதிமன்ற நீதிபதி பதவி எதுவும் கிடைக்காமல் இருந்தது. அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக்கழக ஆட்சிக்காலத்தில் தான் உயர்நீதி மன்ற வரலாற்றிலேயே முதன் முறையாக வன்னிய சமுதாயத்தினருக்குப் பிரதிநிதித்துவம் கிடைக்கும் வாய்ப்பு ஏற்படுத்தப்பட்டது. காவல்துறையிலும உயர் பதவிகளில் வன்னியர்கள் நல்ல முறையில் பணியாற்றி வருகின்றனர்,

பொதுவாழ்வினை எடுத்துக் கொண்டால் அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் சார்பில் வன்னிய சமூகத்தைச் சேர்ந்த பலர் சட்டமன்ற, நாடாளுமன்ற உறுப்பினர்களாகவும், அமைச்சர்களாகவும், பல்வேறு பொறுப்புக்களை ஏற்று திறம்பட பணியாற்றி வரும் வாய்ப்பைப் பெற்றுள்ளார்கள். 234 உறுப்பினர்களைக் கொண்ட தமிழக சட்டமன்றத்தில், அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்ற கழகம் - இந்திரா காங்கிரஸ் பலம் 196 ஆகும். இதில் அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழக சார்பில் 21 பேரும், இந்திரா காங்கிரஸ் சார்பில் 16 பேரும் வன்னிய சமுதாயத்தைச் சேர்ந்த உறுப்பினர்கள் என்பதைக் கருத்திற் கொள்ள வேண்டும். மற்ற கட்சிகளைச் சார்ந்த சட்டமன்ற உறுப்பினர்கள் 2 பேர் வன்னிய சமுதாயத்தைச் சார்ந்தவர்கள் என்பதையும் பார்க்க வேண்டும்

கடந்த மூன்று பொதுத் தேர்தல்களிலும் வன்னிய சமூக மக்கள் பெருவாரியாக உள்ள தொகுதிகளில் தொடர்ந்து அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகமும் அதன் ஆதரவு பெற்ற தோழமைக் கட்சிகளும் வெற்றி பெற்று வந்துள்ளன. இந்த வெற்றியின் வாயிலாக பிற்படுத்தப்பட்ட மக்களாகிய உங்கள் எல்லோரது பேராதரவையும் பெற்று ஒரு மாபெரும் இயக்கமாக அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகமும் அதன் அரசும் பணியாற்றி வருகின்றன.

வன்னிய மக்களிடம் கொண்டுள்ள பாசத்தை வெளிப்படுத்தும் வகையில் புதியதொரு மாவட்டத்திற்கு வன்னிய குல வீர மறவராக விளங்கிய சம்புவரையர் என்பாரது பெயர் சூட்டப்படும் என்று தமிழக அரசு அறிவித்ததை வன்னிய சமூகமே வரவேற்றதை யாரும் மறந்துவிட இயலாது

கழக அரசைப் பொறுத்த வரை, கல்வி வேலைவாய்ப்பு இவற்றுக்கான எங்கும் பின்பற்றப்படும் வகுப்பு அடிப்படையிலான ஒதுக்கீடு முறையையே கடைபிடித்து வருகிறது இந்த வகுப்பு அடிப்படையிலான ஒதுக்கீடு முறையை மீறி சாதி அடிப்படையிலான ஒதுக்கீடு என்ற முறையை நாட்டின் மீது திணிக்க முயற்சி செய்வது தமிழ் சமுதாயத்தின் மத்தியில் புதிய குழப்பங்களும் சிக்கல்களும் உருவாக வழிவகுக்கும் என்பதனை தமிழ் சமுதாயத்தின் ஒட்டுமொத்த வளர்ச்சியில் அக்கறையுள்ள அனைவரும ஆழ்ந்து சிந்திக்க வேண்டிய ஒன்றாகும்.

தமிழ் சமுதாயத்தின் ஒட்டுமொத்த பரவலான நலனைக் கருத்தில் கொள்ளாமல் சிலரால் மேற்கொள்ளப்படும் கிளர்ச்சி போன்ற அணுகுமுறைகள் நாட்டில் நிலவும் அமைதியைக் குலைக்கவும், சமூகங்களுக்கிடையே நிலவும் இணக்கத்தைப் பாழ்படுத்தவும்தான் வழிகோலும் என்பதனை அனைவரும் உணர்ந்து செயல்படல் இன்றைய சூழ்நிலையில் மிகவும் இன்றியமையாத ஒன்று.

அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் தலைமையின் மீதும், கழக அரசின் மீதும், நம்பிக்கையும், பாசமும் கொண்டுள்ள தமிழக மக்கள், குறிப்பாக வன்னிய மக்கள் சுயநல உணர்வுடன் சிலரால் மேற்கொள்ளப்படும் வன்முறைக் கிளர்ச்சிகள் எதுவாயிருப்பினும் அவற்றை தமிழ் சமுதாயத்தின் ஒட்டு மொத்த நலன் கருதி புறக்கணிக்க வேண்டும்.

பொது அமைதிக்கும், பொதுமக்களின் உயிர், உடைமை, பாதுகாப்பிற்கும் வன்னிய சமுதாயத்தினருடைய நற்பெயருக்கும் பங்கம் ஏற்படுத்த திட்டமிட்டு செயல்படும் சுயநலமிகள் யாராயிருப்பினும் அவர்களை அடையாளம் கண்டு புறக்கணித்து ஒதுக்கிடவேண்டும்.

வன்னியர் உள்ளிட்ட பிற்படுத்தப்பட்ட மக்கள் வாழ்வில் ஒளியேற்றும் தமிழக அரசுக்கு ஆதரவை உறுதி செய்திடுவீர் என்று வன்னிய குல மக்களை அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் அழைக்கிறது.

**டாக்டர் எம். ஜி. இராமச்சந்திரன்**

நிறுவனர், பொதுச்செயலாளர்

அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம்